[Sri M. Seshachariar] [30th July 1962

Therefore, the Government must make the people understand that it is not possible at this stage to lower the prices whatever the D.M.K. people might do.

I would like to say one thing in regard to the D.M.K. agitation. I have seen things personally in certain places. Some of the leaders' plead that things happened suddenly. I know as a fact that in our place several arrangements were made even on the previous night. People were taken in lorries to Sriperumbudur. About a thousand people were gathered in a place where there were not even thirty of the party people. Some people gathered stones on the roadsides, had them in their pockets or bags, and they were going about trying to assault even policemen. It was necessary for the Police to resort to lathi charge. Till 12 o'clock the Tahsildar was trying to enter the gates of the taluk office. It was so very difficult for him to enter. A fresh contingent of Police had to be brought in. It was so in all the three gates. Therefore, it is not a case where they did not previously plan. They had planned and done it. Therefore, it is for us to see that such a thing does not happen hereafter. If really what happened was accidental, surely the leaders of the Party would have said that such a thing should not have happened and they should have condemned it. But they have not condemned it. Even in their resolution it is stated that if necessary, they should try to get in by force. Therefore, this Party is surely wedded to violence. At any rate, the supporters of that Party are bent upon causing inconvenience. As a matter of fact, a number of buses which were running to the mufassal were stopped very near Aminjikarai and Poonamallee. There was a scare everywhere that buses would be attacked. It is not possible for us to say what the Government should do. But I can only say that the Government should see that the lives and property of the people are secure.

4-30 p.m. As the hon. Member Sri Srinivasavaradan and the hon. the Deputy Leader of the Opposition, Sri Balasubramanya Ayyar said, this is not the time when you can ask for sepapration, for a separate State and so on. As a matter of fact, the world over people are trying to align themselves with one another. You hear of the European Common Market. You know the purpose of it (An hon. Member: Protecting themselves) No, not for trade alone. It is for various other purposes. We have to understand that. That is why they are gathering together as against Communism, as against other nuclear armed powers who might use it. May be it is thought of as a deterrent by some powers. But the neutral countries may be destroyed without their entering into the hot war. Therefore, it is not possible for anyone to say that he must be alone. Everywhere people are trying to gather together. I should think that, that party should be persuaded to give up this course. I do not know whether it is possible to persuade them. It is not as if they have not thought about the consequences of their policy. But people say that it

is just for advertisement, just for stabilising their party. Whatever it is, I think the Government should take serious steps to see that such things do not recur hereafter.

* **திரு. கே. எஸ். அப்துல் வஹாப்:** மதிப்பிற்குரிய சட்ட மன்றத் தலைவர் அவர்களே, நிதி ஒதுக்கல் மசோதா மீது பேச வேண்டிய நிலையிலே இன்று நான் இந்த சட்டமன்றத்தின் சட்ட திட்டங்களின் 57-வது கிளாஸின்படி தி.மு.க. காரர்கள் நடத்திய மறியல் சம்பந்தமாக ஒரு விவாதம் நடத்த நேரத்தை ஒதுக்க வேண்டுமென்று கோரியிருந்தேன். இந்தக் கோரிக்கைக்கு சட்ட மன்றத் தலைவர் அவர்கள் மறுப்புத் தெரிவித்து விட்டார்கள். அந்த நிலையிலே அதைப் பற்றிச் சொல்லவேண்டிய சில கருத்துக்களை நிதி ஒதுக்கல் மசோதாவின் விவாதத்தில் நான் சொல்ல முற்படுகின்றேன்.

தி.மு. கழகத்தவர்கள் 19-ம் தேதி விலைவாசிகளைக் குறைப் பதற்கு மறியல் நடத்துவதாகப் பிரகடனப்படுத்தியிருந்தார்கள். அந்த மறியல் சமாதான முறையில் சுமுகமான மறியல் நடத்தப் படும் என்பதைத் திட்டவட்டமாக அறிவித்திருந்தார்கள். அந்த மறியலிலே பலாத்காரம் பிரயோகிக்கப்படலாம் என்பதாக எந்தப் பொறுப்புள்ளவர்களும், அந்தக் கட்சியைச் சார்ந்த தலைவர்கள் பேசியதாக யாராலும் நிரூபிக்க முடியாது. ஆக சுமுகமான முறையில் மறியல் நடக்கக்கூடிய சந்தர்ப்பத்திலே அந்தக் கட்சியின் பிரதான தலைவராகிய எனது மதிப்பு மிக்க நண்பர் அறிஞர் அண்ணா அவர்கள் வேலூரிலே மறியலில் பங்கு கொள்வ தாக இருந்தார். சுமுகமான நிலையிலே நடத்தப்படக்கூடிய அந்த மறியலுக்கு வேலூரிலே 144 தடையுத்தரவு போடப்பட்டது. அந்த நிலையிலே அங்கு தடை உத்தரவு போடவேண்டிய அவசியம் என்ன ஏற்பட்டது என்று என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. தடையுத்தரவு பிரகடனப்படுத்தப்பட்டதைத் தொடர்ந்து அறிஞர் அண்ணா அவர்கள் அதை மீறக்கூடிய நிலை, நிர்ப்பந்தமான ஒரு சூழ்நிலை உருவாகியது. அவர் மீறப்போவதாக பிரகடனப்படுத் தினார்கள். அதைத் தொடர்ந்துதான் எல்லா இடங்களிலும் அதன் எதிரொலி. அவர் மீறினால் அவர் arrest செய்யப்படலாம், அதைத் தொடர்ந்து மற்ற இடங்களில் எதிரொலி ஏற்படலாம் என்ற நிலை உருவாகியது. அந்தத் தடை உத்தரவை வேலூரிலே போட்டிருக்காவிட்டால் இந்த எதிரொலிகள் ஒன்றுமே இல்லாமல் சென்ற மாதம் 30-ம் தேதி Secretariat முன்பு நடத்தப்பட்ட மறியல் போல சுமுகமான மறியல் எல்லா இடங்களிலும் நிச்சய மாக நடந்து இருக்கும் என்பது என் அபிப்பிராயம். இந்தத் தடை உத்தரவு காரணமாகத்தான் இவ்வளவு அசம்பாவிதங்கள் ஏற்பட்டன என்று நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். மதிப்பு மிக்க நிதியமைச்சர் அவர்கள், பிரதான எதிர்க்கட்சி யாகிய தி.மு.க.-வினர் 50 பேர் இருக்கிறார்கள், விலைவாசிக்காக சட்டமன்றத்திலே போராடியிருக்கவேண்டும், வெளியிலே போராட அவர்கள் தேர்ந்தெடுத்தது கண்டித்து வருந்தத்தக்கது என்று சொன்னதாக நான் கேள்விப்பட்டேன்.

[30th July 1962

SRI K. RAJARAM : Mr. Chairman, Sir, the hon. Member is referring to something that took place in the other House which I think he should not do.

MR. CHAIRMAN : The hon. Member should not refer to anything that happened in the other House. He should confine himself to whatever happened here. The hon. Member should also be careful in what he says, because I have already disallowed his motion under rule 57. He must not, therefore, touch uppon those points referred to in his motion.

* திரு. கே. எஸ். அப்துல் வஹாப்: தி.மு. கழகத்தவர்கள் எதிர்க்கட்சியாக இருந்து தாங்கள் சொல்லும் அபிப்பிராயங்கள் பேரில் அரசாங்கம் சரிவர கவனம் செலுத்துவது இல்லை, அலட்சியப்படுத்துகின்றார்கள் என்ற குற்றச்சாட்டுகளைச் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். உதாரணத்துக்குச் சொல்ல வேண்டுமேயானால், விலையைக் குறைப்பதற்கு எல்லா கட்சிகளையும் கொண்ட ஒரு குழு அமைத்து அந்தக் குழுவின் மூலம் விலைவாசிகளைக் கட்டுப்படுத்த முற்படலாம் என்று ஒரு அபிப்பிராயம் சொன்னார்கள். நல்ல அபிப்பிராயம் என்பது என் அபிப்பிராயம். அது புறக்கணிக்கப்பட்டது. எதிர்க்கட்சிக்காரர்களுடைய அபிப்பிராயம் சரிவர மதிக்கப்படவில்லை என்பது பொருள். வேறொரு எடுத்துக்காட்டு நான் சொல்ல முடியும். முஸ்லீம்களுக்கு சில குறைபாடுகள் இருக்கின்றன என்பதை நான் எடுத்துச் சொல்லி அவற்றுக்கான நிவாரண வகைகளையும் சொன்னேன். ஒன்று இரண்டுக்கு கனம் மந்திரி அவர்கள் பதில் சொன்னார்கள், அந்தக் கோரிக்கை நியாயமற்றது என்ற முறையிலே. மற்றக் கோரிக்கைகளுக்குப் பதில் சொல்லவில்லை. அதைப்பற்றி எந்தவிதமான நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை. அந்த வகையிலே சட்டமன்றத்திலே எதிர்க்கட்சியில் இருப்பவர்கள் தங்கள் கோரிக்கைகளை எந்த முறையிலே நடைமுறையிலே சாத்தியமாக்க முடியும் என்பதை நான் புரிந்துகொள்ள முடியவில்லை. இந்த நிலையிலே தான் நிர்பந்தப்படுத்தப்பட்டு வெளியிலே அதற்கான ஒரு முயற்சி எடுக்கக்கூடிய ஒரு நிலை உருவாகியது என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

இப்போது அதிகமாக வரக்கூடிய வதந்திகள் ஜெயிலிலே உள்ள ஊழியர்கள் மிகவும் துன்புறுத்தப்படுகிறார்கள். சித்திரவதைக்கு உள்ளாக்கப்படுகிறார்கள் என்பதாகச் செய்திகள் அடிக்கடி கேட்கின்றன. விடுதலை அடைந்து வந்த பலர் என்னிடத்திலே நேரிலே சொன்னார்கள். மன்னிப்பு என்ற கடிதத்திலே பலவந்தமாக அடிக்கப்பட்டு கையெழுத்து வாங்கப்படுவதாகச் சொன்னார்கள். அவர்கள் மறுத்தால், தவறான பாஷைகளால் அவர்கள் திட்டப்படுகிறார்கள் என்றும், அதற்கு மறுத்தால் தனி அறைகளுக்குக் கொண்டுபோகப்பட்டு மிகவும் பலாத்காரமான முறைகள் உபயோகிக்கப்படுகிறதாகச் சொல்கிறார்கள். இதன் உண்மையை அரசாங்கம் கவனிக்கவேண்டும். இதைச் சரிவர ஆராய்வதற்கு ஒரு குழுவையாவது அமைத்து அதில் மதிப்புக்குரிய எதிர்க்கட்சித் தலைவர் கனம் லக்ஷ்மணசாமி முதலியார் அவர்களைத்

30th July 1962] [திரு. கே. எஸ். அப்துல் வஹாப்]

தலைவராகக்கொண்ட ஒரு குழு அமைத்து, ஜெயிலுக்குச் சென்று அங்கு உள்ள நிலைமை என்ன என்பதை அவர் நேரிடையாக அறிந்து இந்த மன்றத்துக்கு **Report** சமர்ப்பித்து அதன் பேரில் அரசாங்கம் அந்தக் குறைபாடுகளை நிவர்த்திக்க முடியும். இதை மேற்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இந்த மறியல் சம்பந்தமாக அரசாங்கம் வெறுப்பு உணர்ச்சியோ பகைமை உணர்ச்சியோ கொள்ளாமல் அன்பையும் அனுசரணையும் கொண்டு கவனிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். நண்பர் ஒருவர் சொன்னர், விநோபாஜி சொன்னர் என்று. ஒரு நெருப்புக் குச்சியைப் பற்றவைத்தால் ஒரு ஆயிரம் ஆண்டுகளாக குகைக்குள்ளே இருந்த இருட்டு போய் பிரகாசமான வெளிச்சம் என்பது இருட்டை விரட்டி விடுகிறது என்று குறிப்பிட்டார்கள். அதைப்போல ஒரு நல்ல முயற்சியை அரசாங்கம், அன்புடன் செய்தால் தப்பபிப்பிராயங்கள் நல்ல அபிப்பிராயங்களாக மாறலாம். அந்த மாதிரியான ஒரு முயற்சி இப்போது காவலிலே வைக்கப்பட்டிருக்கும் எல்லா ஊழியர்களும், தலைவர்களும் நிபந்தனையின்றி விடுதலை செய்யப்படவேண்டும். அவர்கள் மீது தொடரப்பட்டிருக்கும் எல்லா கேஸ்களும் வாபஸ் வாங்கப்படவேண்டும். இந்தக் காரியம் செய்வதனல் எவ்வளவோ நல்ல அபிப்பிராயம் உருவாக முடியும். இந்த நல்ல அபிப்பிராயத்தின் காரணமாக பல நல்ல பலன்கள் அரசாங்கத்துக்கும் ஏற்படலாம். அந்தக் கட்சிக்காரர்களுக்கும் ஏற்படலாம். ஆக அதற்காக முயற்சி எடுக்கவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

கனம் நிதியமைச்சர் அவர்கள் பார்லிமெண்ட் அங்கத்தினர் ஒருவர் டெல்லிக்கு லெட்டர் எழுதினர் என்று அவர்களை நையாண்டி செய்யும் வகையில் சொன்னதாக நான் அறிந்தேன். அவர் டெல்லிக்கு லெட்டர் எழுதினர் என்றால், அதிலே தவறு ஒன்றும் இல்லை என்று நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். போலீஸ் சம்பந்தப்பட்ட சகல உரிமையும் மாகாண அரசாங்கத்திற்கு இருக்கிறது என்பது உண்மை. ஆனல் அதற்கு மேற்பட்ட அதிகாரங்களும் உண்டு . . .

**கனம் திரு. எம். பக்தவத்சலம்:** அந்த அதிகாரங்கள் என்னவென்பதை கனம் அங்கத்தினர் விளக்கவேண்டும்.

**திரு. கே. எஸ். அப்துல் வஹாப்:** கனம் மந்திரி அவர்கள் கொஞ்சம் பொறுமையுடன் கவனித்தால் விளங்கும். நான் விளக்குகிறேன். அந்த அதிகாரங்கள் எல்லாம் மத்திய சர்க்காருக்குத்தான் இருக்கின்றன. அதாவது இந்த நாட்டு அரசியல் நிர்ணயச் சட்டத்தின்படி அரசாங்கம் நடக்கிறது. அந்த அரசியல் சட்டம் மெட்ராஸ் மாகாணத்திற்கு மட்டும் இல்லை. மற்ற மாகாணங்களிலும் அதே சட்டம்தான் அமுல் நடத்தப்படுகிறது. கேரள மாகாணத்திலும் அதே சட்டம்தான் நடைமுறையில் இருக்கிறது. தேர்தலில் வெற்றிபெற்று சட்டசபையில் மெஜாரிட்டி இருந்தும் கேரளத்தில் கம்யூனிஸ்ட் கட்சி ஐந்து ஆண்டுகள் நீடித்து ஆட்சி நடத்தவில்லை. இரண்டரை ஆண்டுகளில்

அந்த அரசாங்கம் முடிந்தது என்பதை நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். ஆக இந்த முறையிலே போலீசார் தங்கள்மீது மிகவும் வேகமாக நடவடிக்கை எடுக்கின்றூர்கள் என்ற உணர்வின் காரணமாக அந்த எம்.பி. அவர்கள் டெல்லிக்கு லெட்டர்
4-40 p.m. எழுதியதில் தவறு இல்லை என்பதைத்தான் எடுத்துச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். ஆக எப்படி இருந்தாலும் அரசாங்கம் நல்ல எண்ணத்துடன், அன்பை அடிப்படையாகக் கொண்டு இந்தப் பிரச்னையை அணுகவேண்டும் என்று கேட்டுக்கொண்டு நான் என் பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

**கனம் திரு. எம். பக்தவத்சலம்:** கனம் தலைவர் அவர்களே, கடைசியாகப் பேசிய அங்கத்தினர் உள்பட, இந்த விவாதத்தில் கலந்துகொண்ட எல்லா அங்கத்தினர்களும் அரசாங்கத்திற்கு யோசனைகளும் கருத்துக்களும் தெரிவித்தார்கள். ஆகவே, அவர்களுக்கு முதல்முதலாக என்னுடைய நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

முதலிலே இந்த விவாதத்தைத் துவக்கிய கனம் அங்கத்தினர் திரு. ஸ்ரீனிவாசவரதன் அவர்கள் விலைவாசியைப்பற்றி ஒரு பிரச்னையைக் கிளப்பினூர். கிளப்பிவிட்டு, நான் அதற்குப் பதில் சொல்லுவதற்கு விட்டுவிடவில்லை. அவரே பதில் சொல்லி விட்டார். பிரச்னையைக் கிளப்பி, அவரே பதிலும் சொல்லி விட்டார். அதுதான் ஆசிரியருக்கு அழகு. மாணவர்களைக் கேள்விமட்டும் கேட்டுவிட்டு, உளரவிடக்கூடாது. அந்த உயர்ந்த மாண்பு இருக்கவேண்டும். அது கனம் அங்கத்தினர் அவர்களுக்கு இருக்கிறது. விலைவாசி ஏறி இருக்கிறது. நான் கூறக்கூடிய விடையை அவர்களே அளித்துவிட்டார்கள். விலைவாசிகள் அதிகமாக இருக்கின்றன என்றூல், அது உலகம் பூராவும் உள்ள நிலைமை. விலைவாசி அதிகமாகி இருக்கிறது, Standard of living அதிகமாகி இருக்கிறது, வாங்கும் சக்தி அதிகமாகிக் கொண்டிருக்கிறது, உற்பத்தியும் பெருகிக்கொண்டிருக்கிறது. உற்பத்தி பெருகுகிறது, வாங்கும் சக்தி பெருகுகிறது, வாழ்க்கைத்தரம் உயருகிறது, விலைவாசி உயர்ந்துகொண்டு போகிறது. திட்டம் வேண்டாம் என்று சொல்லவில்லை. விலைவாசி உயர்வைக் கட்டுப் படுத்தவேண்டும். எப்படிக் கட்டுப்படுத்துவது? இன்றைக்குச் சட்டம் போட்டு கட்டுப்படுத்த முடியுமா? விவசாயிகளுக்கு உத்தரவு போட்டு இந்த விலைக்குத்தான் விற்கவேண்டும் என்று சொன்னூல் விவசாயம் பண்ணுவார்களா? அது நடக்காது. உலகத்திலே உள்ள நிலைமை இது. இந்த நாட்டிலும் விலைவாசி உயர்ந்து கொண்டு போவதால் பாதிக்கப்பட்ட மக்கள் Fixed income உள்ளவர்கள். அவர்களுக்கு எத்தகைய நிவாரணம் அளிப்பது என்பதைக் கவனிக்கவேண்டும். இதைக் கவனித்துக்கொண்டிருக்கிறோம் என்று முன்பே சொன்னேன். இதைக் கவனித்துக் கொண்டிருக்கின்ற நிலைமையில்தான், கூட்டுறவு ஸ்தாபனங்கள் வைத்து, 10 இடங்களில், சென்னையில் இதற்கான முயற்சி செய்யப்படுகிறது. பிறகு இதர இடங்களிலும் இத்தகைய கடைகளை நிறுவலாம். அறுவடை காலங்களில் நடுத்தர வியாபாரிகள், நடுவில் இருக்கிறவர்கள், குறைந்த விலைக்கு வாங்கி அதிக லாபம் அடைய இடம் கொடுக்காமல்,

30th July 1962] [திரு. எம். பக்தவத்சலம்]

இதை மொத்தத்தில் ஒரு **Purchasing Machinery** ஏற்படுத்தி, அறுவடை காலத்தில் எங்கே கிடைக்கிறதோ, அங்கே மொத்த மாக வாங்கி ஸ்டோர் பண்ண கோடவுன் ஏற்பாடு செய்து அதிக லாபம் இல்லாமல், ஓரளவு லாபத்தில் விற்பதற்கு வேண்டிய ஏற் பாடுகள் செய்யலாம் என்ற யோசனையை நான் முன்பே சொல்லி இருக்கிறேன். அதிலே அரசாங்கம் கவனம் செலுத்தும். ஆனால் ஒன்று. இந்த விலைவாசியைப் பற்றி நாம் பேசவேண்டியதுதான். ஒரு உத்தரவு போட்டுவிட்டால் விலைவாசி குறைந்துவிடாது. விலை வாசியைக் குறைப்பது என்பது மாநில ரீதியில்கூட முடியாது. அதை இந்திய ரீதியில் பண்ணவேண்டும். **National Development Council** -ல் கமிட்டி போட்டார்கள். பல நிபுணர்கள் அதிலே **Co-opt** செய்யப்பட்டனர். நான்கூட டெல்லிக்குப் பல கமிட்டி கூட்டங்களுக்குப் போய் இருக்கிறேன். விலைவாசி உயர்வுக்கு பல அம்சங்கள் காரணமாக இருக்கின்றன. அவைகளை எல்லாம் பரிசீலனை செய்த பிறகு என்ன செய்யவேண்டும் என்று பார்க்கவேண்டும். இதற்காக **Planning** குறித்து குற்றம் சாட்டி அதை வேண்டாம் என்று சொல்லக்கூடாது. மக்களுடைய வாழ்க் கைத் தரம் உயர்வதற்கும், வசதிகள் பெருகுவதற்கும் **Planning** இன்றியமையாதது. அதைக் குறைக்க முடியாது. முப்பது ஆண்டுகளுக்கு முன்பு ஒன்றும் இல்லாதபோது இருந்த விலையை நினைத்துக்கொண்டு இப்பொழுது சொன்னால் பிரயோஜனம் ஒன்றும் இல்லை. இது சிக்கலான பிரச்சனை. இதைப்பற்றிப் பேச வேண்டியதுதான். உறுப்படியாக ஏதாவது சொன்னால் கேட்க லாம். விலைவாசியைப்பற்றிப் பேசுகிறபோது, இந்த மறியலைப் பற்றிப் பேச வேண்டாம். அது தனி விஷயம். ஏதோ ஒன்றை நினைத்துக்கொண்டு மறியலாக நடந்தது. ஏதோ ஒரு இயக்கம் இருக்கிறது. அதற்கும் இதற்கும் சம்பந்தம் இல்லை. அதைச் சம்பந்தப்படுத்திப் பேச வேண்டாம் என்றுதான் மன்றத்தில் உள்ள அங்கத்தினர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

இந்த நாட்டுப் பிரிவினையைப் பற்றிச் சொன்னார்கள். பிரிவினை என்பதற்கு இடம் கொடுக்கக்கூடாது.

அடுத்தபடியாக, முக்கியமாக சர்க்கார் உத்தியோகஸ்தர்கள், ஆசிரியர்களைப் பற்றிச் சொன்னார்கள். ஆசிரியர்களுக்கு இதிலே இடம் இருக்கமுடியாது, இருக்கவும் கூடாது. அப்படி அந்தக் கருத்து உள்ளவர்கள் இதிலே இருக்கவே கூடாது என்று சொன் னார்கள். நாங்களும் அனுமதிக்கமாட்டோம். சிலபேர் நமக்கு உபதேசம் செய்கிறார்கள். சொன்னால் சொல்லிக்கொண்டு போகட்டும் என்று சொல்லுகிறார்கள். சில பத்திரிகைகளும் எழுதுகின்றன. அவலை நினைத்துக்கொண்டு உரலை இடிப்பது என்று ஒரு பழமொழி உண்டு. அது கனம் அங்கத்தினருக்குத் தெரியும், மற்றவர்களுக்கும் தெரியும். இம்மாதிரியான பிரிவினை சக்தி, நாச சக்தி எல்லாம் உலகம் தோன்றிய நாளிலிருந்து இருந்து வருகிறது. இந்தத் தீய சக்திகளிலிருந்து மக்களைப் பாதுகாப்பதற்கும் நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வந்திருக்கிறது. ஆகையால் நாம் அதைப்பற்றி விவாதிக்க வேண்டியதில்லை. இவ் விஷயமாக அரசாங்கம் கவனம் செலுத்திக்கொண்டு வருகிறது.

கல்வி விஷயத்தைப்பற்றி நான் முன்பே சொன்னேன். அதிலே இன்னும் முடிவுருத பிரச்னைகள் இருக்கின்றன. நிபுணர்களோடு கலந்து பேசி, மற்றவர்களோடு கலந்துபேசி, இந்த ஆண்டு இறுதிக்குள் முடிவு செய்வோம் என்ற நம்பிக்கையோடு இருக்கிறோம் என்று எடுத்துச் சொன்னேன். கனம் அங்கத்தினர் அவர்களும் "South Indian Teachers' Association" சார்பாக இன்னும் சில பிரதிநிதிகளோடு என்னிடம் வந்து Secondary Education பிரச்னைகளைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள். அவர்களுடைய ஆலோசனையைத் தெரிந்து கொண்டேன். Secondary Education முக்கியமானது தான். நாம் எல்லோரும் கலந்து பேசி ஒரு முடிவுக்கு வர வேண்டும். Three Language Formula -ஐப்பற்றிச் சொன்னார்கள். மும்மொழிக் கொள்கை என்பது ஹைஸ்கூலில் ஏற்பட்டது. இந்த மொழி விஷயத்தில் ஏதாவது செய்வது என்றால், அந்த கொள்கையையே மாற்ற வேண்டியதாக இருக்கிறது. அரசாங்கம் யோசனை செய்து கொண்டு வருகிறது. எல்லா பிரச்சனைக்கும் நிபுணர்களுடன் கலந்து பேசி, என்ன செய்வது என்பது பற்றி முடிவு செய்யலாம். தமிழ் படித்துத்தான் ஆகவேண்டும். "Scientific Terms" எல்லாம் வேறு மொழியில் பெரிய வார்த்தைகளைப் போடுவது தவறு. "International Terms Scientific Terms"-க்கு இருப்பது நல்லது. அதை நம் பிள்ளைகள் சுலபமாகப் புரிந்துகொள்ள முடியும். University Medium-ஐப் பற்றிச் சொன்னார்கள்.

உயர்நிலைப் பள்ளிகளைப் பொறுத்தவரையில், தமிழ் மீடியம் என்பது ஒப்புக்கொள்ளப்பட்டது. ஆங்கில மீடியம் உள்ள பள்ளிகள் இங்குமங்குமாக மொத்தம் 85 என்று கணக்குக் கொடுக்கப்பட்டது. மாநிலத்தில் 1,800 உயர்நிலைப் பள்ளிகள் உள்ளன. (4-50 p.m.) இதில் 85 பள்ளிகளில் ஆங்கில மீடியம் கொடுத்தால் என்ன தவறு? இது புதிதாக ஏற்பட்டது அல்ல. போன வருஷத்திலேகூட கொடுத்திருக்கிறார்கள். ஆங்கில மீடியமும் கொடுக்கப்படவேண்டும். கொடுக்காமல் விட்டால்தான் வெறுப்பு வருகிறது. சிறுபான்மையோருடைய தேவையைப் பார்க்கவேண்டும். அதுமாத்திரமல்ல. ஜனநாயகத்தில், பெற்றோர்கள் எங்கள் குழந்தைக்கு ஆங்கில மீடியம் கொடுக்கவேண்டுமென்று சொன்னால், அதை நாம் மறுப்பது சரியாகாது. உயர்நிலைப் பள்ளிகளைப் பொறுத்தவரையில், தமிழைத் தாய் மொழியாகக் கொண்டவர்களைப் பொறுத்தவரையில், தமிழில்தான் பாடம் சொல்லிக் கொடுக்க வேண்டியிருக்கிறது. யுனிவர்சிடி படிப்பைப் பொறுத்தவரையில், தமிழில் ஏன் சொல்லிக்கொடுக்கக் கூடாது? சொல்லிக்கொடுக்கக் கூடாது என்பது என் அபிப்பிராயம் அல்ல. சொல்லிக் கொடுக்கக் கூடும் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது. இதைச் சொல்லும்போது, ஏதோ உபசாரத்திற்குச் சொல்கிறார்கள் என்று சிலர் நினைக்கலாம். தமிழ் மீடியத்தை நான் எதிர்க்க வில்லை. அதற்கு என்று ரூ. 10 லட்சம் ஒதுக்கியிருக்

30th July 1962] [திரு. எம். பக்தவத்சலம்]

கிறேம். தமிழ் பப்ளிகேஷன் பீரோ மூலம் பாடப் புத்தகங்கள் எழுதுவதற்காக மட்டும் அதை ஒதுக்கியிருக்கிறேம். பொதுவாக காலேஜில் ஆங்கிலம் இருக்கிறது. ஆங்கில மீடியமே கூடாது என்பதை நாம் ஒப்புக்கொள்ள முடியாது. வருகிற ஆண்டில் அல்லது இந்த ஆண்டில் ஆங்கில மீடியம் இருப்பதால் அங்கு போகிறார்கள். தமிழையே வைத்துவிடவேண்டுமென்று கட்டாயப்படுத்த வேண்டும் என்று சொன்னால், இந்த அரசாங்கம் அதை ஒப்புக்கொள்ளாது. அது குழந்தைகளுக்கு நல்லதல்ல, மக்களுக்கு நல்லதல்ல. நேஷனல் இண்டெகிரேஷன் பற்றி நாம் உணர்ந்து பேசுகிறேம். அப்படி ஒருவருக்கொருவர் தொடர்பில்லாமல் எப்படி நேஷனல் இண்டெக்ரேஷன் உருவாகும்? அங்கத்தினர் திரு. அப்துல் வகாப் அவர்கள் சொல்லிய மாதிரி, ஆபத்து காலத்தில் வழி தெரியாமல் மத்திய அரசாங்கத்தை அணுகினர் ஒரு எம்.பி. என்றார். அந்தக் காலத்தில் மாத்திரம் மத்திய அரசாங்கத்தை நினைத்தால் எப்படி? எப்போதும் அந்தத் தொடர்பு இருப்பது நல்லது. அந்தத் தொடர்பு வருவதற்கு நான் தமிழ் எம்.ஏ., பி.ஏ., மட்டும் படித்து விடுகிறேன் என்றால் போதுமா? அப்படியென்றால் அலகாபாத், அலிகார், பனாரஸ் யுனிவர்சிடிகளுக்கு எப்படிப் போக முடியும்? அங்கு தமிழ் மீடியம் எங்கு இருக்கிறது? மேல் நாடுகளுக்கு எப்படிப் போக முடியும்? இதைச் சொல்லும்போது, எத்தனை பேர் அமெரிக்காவுக்கும், ஜெர்மனிக்கும் போகிறார்கள் என்று கேட்கலாம். எல்லோரும் போகாவிட்டாலும் அவர்களுக்கு இந்த 'ஆஸ்பிரேஷன்' இருக்கிறது. கிராமத்திலுள்ள ஏழை எளியவர்களாக இருந்தாலும், அவர்கள் குழந்தைகள் அமெரிக்காவுக்கு, ஜெர்மனிக்கு, இங்கிலாந்துக்குப் போகவேண்டுமென்று விரும்புகிறார்கள். நாம் இப்போது அகில இந்திய ரீதியில் இந்தியை ஒப்புக்கொள்ள முடியவில்லை. இந்தி அகில இந்திய மொழிதான். இருந்தாலும் எல்லோரும் அதைப் படிக்கமுடியாது என்பதாலும் ஆங்கிலம் எல்லோருக்கும் ஓரளவு 'அசோஷியேட் லாங்வேஜாக' இருக்கிறது என்பதாலும் ஆங்கிலத்தை எடுத்திருக்கிறார்கள். ஆங்கிலம் வேண்டாமென்று சொன்னால் எப்படி? தமிழ் மீடியம் எடுத்துக்கொள்வதில், குழந்தைகளுக்கு படிப்பு இல்லை என்றால், குழந்தைகள் மீது ஆத்திரப்பட்டு என்ன பிரயோஜனம்? அல்லது என் மீது ஆத்திரப்பட்டு என்ன பிரயோஜனம்? ஆகையால் எதையும் அவசரப்பட்டுக் கட்டாயப்படுத்துவது நல்லதல்ல. தமிழ் நாட்டுக்கு நல்லதல்ல. தமிழ் மக்களுக்கு நல்லதல்ல. நேஷனல் இண்டெக்ரேஷனுக்கு நல்லதல்ல. மக்களின் சிறந்த வாழ்க்கைக்கு நல்லதல்ல. ஆங்கிலமும் தமிழும் மீடியமாக இருக்கட்டும். தமிழ்தான் பெரும்பாலும் இருக்கிறது. ஆங்கில மீடியமும் இருப்பதால் அதில் தப்பில்லை. இது என்னுடைய சொந்த அபிப்பிராயம். இது சம்பந்தமாக நிபுணர்களைக் கேட்டு முடிவு செய்யத் தயாராக இருக்கிறேம். எனக்கு ஓப்பன் மைண்டு (Open mind) தான். அவசரப்படுவது தமிழுக்கு நல்லதல்ல. ஏதோ கட்சி என்று வைத்துக்கொண்டு நாம்தான் தலையில் தாங்குவது போல் தமிழ் மீடியம்,

தமிழ் மீடியம் என்று சொல்லிக்கொண்டு தீர்மானம், மகாநாடு என்று போடுவதில் அர்த்தம் இல்லை. தமிழ் மீடியம் இருக்கும். இதைப்பற்றி ஒவ்வொரு கல்லூரியையும் கேட்டுக்கொண்டிருக்கிறேன். அடியோடு ஆங்கிலத்தை எடுத்துவிட்டு தமிழை வைத்துக்கொள்ள யாரும் தயாராக இல்லை. ஆங்கிலத்தை வைத்துவிடவேண்டுமென்று நான் சொல்லவில்லை. வைத்துப் பார்க்கவேண்டுமென்றுதான் சொல்கிறேன். அதை அடியோடு எடுத்துவிடப்போவதில்லை. மற்றக் கல்லூரிகள் சென்னை, மதுரை, திருநெல்வேலி, சேலத்தில் வைக்கவேண்டுமென்று சொல்கிறார்கள். சேலத்தில் முனிசிபல் கல்லூரியாக இருந்தபோது அதில் ஒரு பிரின்சிபால் இருந்தார். அந்த பிரின்சிபால் தமிழ்மீது ரொம்ப உற்சாகமாக இருந்தார். அவர் அதை காலேஜில் வைத்துப் பார்த்துவிட்டு இன்னும் 50 வருஷங்களுக்கு அது முடியாது என்று சொன்னார். இதை நான் பயமுறுத்துவதற்காகச் சொல்லவில்லை. தவறான கருத்தாக இதைச் சொல்லவில்லை. அவசரப்பட்டு நான் ஏதோ சாதித்து விடுகிறேன் என்று கிளம்புவதில் பிரயோஜனம் இல்லை என்பதற்காகத்தான் சொல்கிறேன். ஆங்கிலம் நேஷனல் இண்டெக்ரேஷனுக்கு அவசியம். தமிழை வைத்துக்கொண்டு நேஷனல் இண்டெக்ரேஷன் செய்ய முடியாது. தமிழில் இன்னும் அதிகமாகப் படிக்கவேண்டும். அதில் இன்னும் அதிகப் புத்தகங்கள் வரவேண்டும். இதை நான் ஒப்புக்கொள்கிறேன். இந்தியை நாம் ஏற்றுக்கொள்ள முடியாத நிலையில் இருக்கிறோம். ஏதோ நினைத்துக்கொண்டு ஆங்கில மீடியம் வேண்டாமென்று சொல்வது தவறு என்று சொல்ல விரும்புகிறேன். கலந்து பேசி, உயர்நிலைப்பள்ளிக்கு, ஆரம்பப் படிப்புக்கு என்ன முடிவு, எப்படிச் செய்வது என்பதை முடிவு செய்யப்போகிறோம், இறுதி முடிவாகச் செய்யப் போகிறோம். அரசாங்கம் பண்ணக்கூடாது, டி.பி.ஐ. பண்ணக்கூடாது என்று சொல்வது கூடாது. அவற்றிலும் மனிதர்கள் தான் இருக்கிறார்கள். இல்லாவிட்டால் யுனிவர்சிடியிடம் கொடுத்துவிடலாம். ஸ்டேச்சுடரி போர்டு ஏற்படுத்தலாம் என்றெல்லாம் சொன்னால் என்ன அர்த்தம்? இது என்ன சித்தாந்தம்? நாங்கள் என்ன இண்டர்ஃபியர் பண்ணுகிறோம்? அவர்களுக்கு அந்த (Obsession) எண்ணம் வேண்டாமென்று சொல்ல விரும்புகிறேன்.

கனம் அங்கத்தினர் அவர்கள் ஆசிரியர்களுக்கு எப்போதும் இடைவிடாமல் உற்சாகத்துடன் பாடுபடுகிறவர்கள். அவர்களும் பேசினார்கள். அதற்கு இரண்டே இரண்டு வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். "I have listened to him and I have taken note of what he has said". வேறு ஒன்றும் சொல்லவேண்டியதில்லை, அவர்களுக்கு அனுகூலமாக.

இந்த மறியலைப் பற்றி கனம் அங்கத்தினர் திரு. பாலசுப்ரமணிய அய்யர் அவர்கள் பேசினார்கள். மறியல் கூட, 'பிக்கெட்டிங்' கூட அகிம்சை முறையில் இருக்குமா? அது எப்படியிருக்கும்? தமிழில் மறியல் என்றால் என்ன அர்த்தம்? தடுப்பது என்றால் அகிம்சை என்று சொல்வது எப்படி? தடுப்பது என்பது "நீங்கள்

**30th July 1962]** *[திரு. எம். பக்தவத்சலம்]*

போகாதீர்கள்" என்று சொல்லலாம். கள்ளுக்கடைக்குப் போகாதீர்கள் என்று சொன்னோம். முன்னே போகிறவனைத் தடுத்து நிறுத்தினால் அது 'வையலன்ஸ்' அப்படிச் செய்கின்றவர்களைத் தண்டித்தால் குறைசொல்வதற்கில்லை என்று காந்தியடிகள் கூறியிருக்கிறார். **Violent picketing and peaceful picketing** என இரண்டையும் பாகுபடுத்தியிருக்கிறார். கெடுதலாக இருந்தால் "நீ அதற்குப் போகாதே" என்று கேட்டுக் கொள்ளலாம். ஆகையால்தான் காந்தியடிகளுடைய கோட்பாடு வயலண்ட் "பிக்கெட்டிங்" இல்லாமல் சாத்வீக பிக்கெட்டிங்காக இருக்கலாம் என்பது. பலாத்காரமாக அது இருக்கக்கூடாது. அன்னிய நாட்டுத் துணிகளை வாங்காதே என்று மறியல் செய்தோம். போகிறவனைக் கையைப் பிடித்துத் தடுத்தால், அது பலாத்காரம் தான். இந்த மறியலைப் பொறுத்த வரையில், கனம் அங்கத்தினர் அப்துல் வகாப் அவர்கள் பேசினார்கள்.

ஒன்று எனக்கு ரொம்ப சந்தோஷம். ரொம்ப திருப்தி. 19-ம் தேதியிலிருந்து இன்று காலை வரையில் சட்டசபை கூட்டம் நடந்து முடிந்தது. 19-ம் தேதியிலிருந்து 50 ஸ்தானங்கள் காலியாக இருக்கின்றன. தி.மு.க.வினர் முக்கியமான எதிர்க்கட்சி ஆவார்கள் 5–00 p. m.
அதில் பேசுவதற்கு ஒருவர்கூட கிடையாது. எதிர்க்கட்சி நன்றாக விளங்கவேண்டும் என்பதுதான் என் ஆசை. ஜனநாயகத்தில் எதிர்க்கட்சி முக்கியமானது. எனக்கு ஏற்பட்ட வருத்தம், ஏமாற்றம், குறை எல்லாம் இன்று தீர்ந்து போய்விட்டது. 19-ம் தேதியிலிருந்து இன்று வரை தி.மு.கழகக் குரல், இங்கே கேட்கவில்லை. பத்திரிகையில் வரவில்லை. **Telephone-** ல் பேசுகிறார்கள், இங்கே வராது. அங்கத்தினர்கள் நேராகப் பேசுகிறார்கள். நேற்று ஒருவர் **Telephone-** ல் பேசினார். மன்றத்தில் கேட்கிற பாக்கியம் எனக்கு இல்லை. குறை ஒருவாறு இன்று தீர்ந்துவிட்டது. தி.மு.க. ஓட்டிலே வந்தவர், தி.மு.க. வுக்காகப் பேசினார், வாதாடினார். அந்தத் தொடர்பு இருக்கும். முன்னே இருந்த தொடர்பு, தி.மு.க.-லீகுக்கு இருக்கிற தொடர்பு தவிர தி.மு.க. ஓட்டிலே வந்தவர். அந்த நன்றி உணர்ச்சியை ரொம்பப் பாராட்ட வேண்டும். 'அவர்கள் உதவியால் நாம் தேர்ந்தெடுக்கப்பட்டோம், அவர்கள் இல்லாத காலத்தில் நாம் பரிந்து பேசுகிறோம்' என்று அவர்கள் பேசினார்கள். அந்த முறையை நான் பாராட்டுகிறேன்.

அவர்களுக்கு மறியலைப்பற்றி அதிகமாகத் தெரியாது. நான் சொன்னால் கோபித்துக் கொண்டார்கள். "நாங்கள் எல்லாம் படிக்காதவர்களா? நீ யார் செல்வதற்கு" என்று சொன்னார்கள். **Constitution** என்றால் அரசியல் அமைப்புச் சட்டம் என்று சொன்னார்கள். மத்திய அரசாங்கம் இதைச் செய்யலாம் என்று சொன்னார்கள். **Constitution** - ஐப் படிக்கவேண்டும். மாகாண சட்டசபையில் பேசுகிறார்கள். மாநில உரிமை, ஆட்சி உரிமை, இந்த **Constitution-** ல் **Provincial Automony** எத்தகையது என்பதை எல்லாம் நன்றாகப் பொறுப்பேற்றுப் புரிந்து கொள்ள வேண்டும். மத்திய அரசாங்கத்தின் தயவு இப்போதாவது

வேண்டியிருக்கிறது என்று தெரிகிறது. பிரதம மந்திரி அவர்களுக்கு தூது போகட்டும். நேருவிடம் சொல்லட்டும். நிலைமைகளைச் சொல்லட்டும். அப்படிச் சொல்வதில் தவறு இல்லை.

மறியலில் என்ன பண்ணினார்கள் என்று கனம் அங்கத்தினர் கேட்டார்கள். என்ன பண்ணினார்கள்? மறியல் பலவிதம். கள்ளுக் கடை மறியல்; அந்நிய நாட்டுத் துணி மறியல்; இப்படி மறியல்கள் உண்டு. கலெக்டர் ஆபீசுக்கு கலெக்டர் போகக் கூடாது. மற்ற உத்தியோகஸ்தர்கள் போகக்கூடாது. Deputy Collector ஆபீசுக்குப் போகக்கூடாது, தாசில்தார் ஆபீசுக்குப் போகக் கூடாது என்றால் இது என்ன மறியல்? அவர்கள் பேரில் என்ன கஷ்டம்? கலெக்டருக்கு என்ன கஷ்டம்? விலைவாசி என்ற பேரைப் போட்டு கலெக்டர் ஆபிஸ் முன்பு மறியல், போக வேண்டாம் என்று மற்றவர்களைப் பார்த்துச் சொல்லட்டும், போகிறவர்களை கை கூப்பியோ "டே" என்று கூப்பிட்டோ வேண்டுமானாலும் சொல்லட்டும். இந்த சாராருக்கு மரியாதை கிடையாது. சிறைக்குப் போகாதீர்கள். நாங்கள் போக வேண்டாம் என்று சொல்கிறோம். குறுக்கே போய் படுத்துக் கொள்வது, உட்கார்ந்து கொள்கிறது, போகவொட்டாமல் தடுக்கிறது, இதைப் பார்த்துக் கொண்டு அரசாங்கம் இருக்க முடியுமா? தி.மு.க. தீர்மானம் போட்டுவிட்டார்கள், தலைவர்கள், தொண்டர்கள் வந்து விட்டார்கள், கலெக்டர் ஆபீசுக்கு holiday என்று விட்டு விட முடியுமா? கனம் அங்கத்தினர் சொல்வது எனக்குப் புரியவில்லை. இதிலே ஏதோ சொல்கிறார்கள். 144 தடை உத்தரவு என்று சொல்கிறார்கள். எனக்கு ஒன்றும் புரியவில்லை. இதற்கு முன்பு வேறு இடத்தில் சொன்னார்கள். பலாத்கார மறியல், Physical Obstruction வேண்டுமா, வேண்டாமா என்ற பேச்சு அவர்களுக்குள்ளே வந்தது. அபிப்பிராய பேதம் இருந்தது. அவர்கள் தலைவர் சொன்னபடி முடிவு செய்யப்பட்டது. அந்த வகையில்தான் மறியல் செய்தார்கள். அவர்கள் arrest செய்யப்பட்டார்கள். Arrest செய்யாமல் என்ன செய்வது?

**திரு கே. எஸ். அப்துல்வஹாப்:** 'Peaceful picketing' என்று சொல்லப்பட்டது.

**கனம் திரு எம். பக்தவத்சலம்:** அந்தப் பிரகடனம் நமக்குத் தெரியாது. 19-ந் தேதி காலை 9 மணி தொடங்கி அறிஞர் அண்ணா அவர்களும், நாவலர் அவர்களும் என்ன செய்தார்கள்? வரவொட்டாமல் தடுத்தார்கள். 30-ம் தேதி கோட்டைக்கு வெளியிலே இருந்து ஏதோ சொல்லிக் கொண்டிருந்தார்கள். விட்டு விட்டோம். அவர்களைத் தொடவில்லை. Gate -க்கு வெளியே இருந்தார்கள். அந்தப் பக்கம் இருந்து சொல்லிக் கொண்டிருந்தார்கள். அத்துமீறி வராமல் இருப்பதற்கு போலீஸ் பாதுகாப்பு கொடுத்தார்கள். வருகிறவர்களைத் தடுத்தால் பார்த்துக் கொண்டிருக்க முடியுமா? Arrest பண்ணினால் எத்தனை கலாட்டா, எத்தனை தொந்தரவு, எத்தனை ரௌடித்தனம், பொது சொத்துக்கு எத்தனை நஷ்டம்? வீடு

30th July 1962] [திரு. எம். பக்தவத்சலம்]

புகுந்து அடித்து அக்கிரமம் நடந்திருக்கிறது. அது மாத்திரமா? வேலூரிலே யாரை விட்டார்கள்? வேலூரிலே ஒரு ரொம்ப முக்கியமான வக்கீல். எத்தனையோ வக்கீல்கள் practice உள்ளவர்கள் இருக்கிறார்கள். அந்த வக்கீல் காலையிலே கோர்ட்டுக்குப் போகிறார். அவர் காங்கிரஸ்கார வக்கீல் என்று அடித்தார்கள். காருக்கு ரொம்ப damage ஆகிவிட்டது. அவர்கள் தன்மை எப்படிப்பட்டது? உள்ளூர் பிரமுகர் வேலூரிலிருந்து வந்திருந்தார். அவர் என்னிடம் வர்ணித்தார். ஜட்ஜ் கூட போகக் கஷ்டப்பட்டிருக்கிறார். வேலூரிலே கல் அடித்து, நிறுத்தி ஓட்டு என்றார்கள். காரிலே போகிற நீதிபதி நடந்து போக வேண்டி இருந்தது. காங்கிரஸ்கார வக்கீல் என்று சொல்லி அடித்தால் என்ன அர்த்தம்? காங்கிரஸ்காரர்கள் வக்கீல் ஆக வரக்கூடாதா? இந்த மாதிரி எல்லாம் அக்கிரமம் பண்ணி விட்டு இப்போது பெரிய பதிவிரதை மாதிரி பேசுவது என்றால் என்ன அர்த்தம்?

அப்புறம் சிறையிலே என்ன நடந்தது? சிறையிலே 21-ம் தேதி இந்த மாதிரி. அதற்கப்புறம் பலாத்கார செயலில் ஈடுபட்டு நஷ்டம் செய்தவர்கள் லிஸ்ட் போலீஸிடம் இருக்கிறது. இவர்களைப் பிடித்து சிறையில் வைத்திருக்கிறார்கள். 21-ம் தேதி அவர்களிலே சில பேர் சாப்பாட்டுத் தட்டை சுக்கல் நூறாக்கி துண்டுகள் ஆக்கி அடித்தார்கள். சௌகார்பேட்டைக்குப் போகும் போது 4 கல்லை மடியிலே கட்டிக் கொண்டு போனார்கள். இது எல்லாம் நியாயம் என்று கனம் அங்கத்தினர்கள் சொல்வார்களா?

**திரு. கே. எஸ். அப்துல் வஹாப்:** பலாத்காரத்தை நான் கண்டிக்கிறேன். தலைவர்கள் பலாத்காரத்தைச் செய்யச் சொல்லவில்லை. தங்கள் கட்சி பொறுப்பு எடுக்கவில்லை என்று சொன்னார்கள்.

**கனம் திரு. எம். பக்தவத்சலம்:** ஒப்புக்காக ஏதோ அவர்கள் தலைவர்கள் செய்திருக்கிறார்கள். 144 எங்கே வந்தது? இது எல்லாம் கதை. அங்கே சொல்கிற கதையை வைத்துச் சொல்வது என்ன அர்த்தம்? நேரே போய் மறியல் செய்திருக்கிறார்கள். தலைவராக இருந்தால் என்ன? தொண்டராக இருந்தால் என்ன? குற்றம் செய்திருக்கிறார்கள். தட்டை உடைத்து, ஜெயில் கதவுகளை உடைத்து குவாரன்டைன் கதவுகளை உடைத்து வாய்க்கு வந்தபடி திட்டி ஜெயிலில் இருக்கிறவர்கள் உத்தியோகஸ்தர்கள் பார்த்து ஒன்றும் செய்யமுடியாமல் அதற்கப்புறம் ஓரளவு பலாத்காரத்தை உபயோகப்படுத்த வேண்டியிருந்தது. இதைச் செய்ய 15 நிமிஷம் ஆயிற்று. இவர்கள் அடங்கிப் போய் விட்டார்கள்.

நேற்றுக் கூட தி.மு.க. தலைவர் ஒருவர் போனில் சொன்னார். இன்ன மாதிரி அடிக்கிறார்கள் என்று சொன்னார்கள். எதிர்க் கட்சி என்று சொல்லவில்லை. நேற்று ராத்திரியிலேயே சூபரின் டென்டை, ஜெயிலரை Penitentiary-ல் இருக்கிறவர்களை விசாரித்தேன். 21-ம் தேதி சம்பவத்துக்குப் பிறகு ஒன்றும் நடக்கவில்லை.

முந்தா நாள் 378 பேர் மன்னிப்பு கேட்டார்கள். 353 பேர் மாத்திரம் Penitentiary- லே மன்னிப்பு கோரியிருக்கிறார்கள். picket பண்ணினவர்கள் தெரியாமல் செய்துவிட்டோம், மன்னிக்கவேண்டுமென்று சொன்னார்கள்.

அரசாங்கத்திலிருந்து, முந்தாம் நாள் உத்தரவு வந்ததும் 378 பேரை ரிலீஸ் பண்ணிவிட்டார்கள் என்று செய்தி வந்தது.
5-10 p.m. சூப்பிரண்ட்டெண்டண்ட், ஜெயிலர், இவர்கள் கிட்டே இருந்து தகவல் வந்தது. முந்தாம் நாள் அடித்திருந்தால் நேற்று சொல்வது தானே. நேற்று மறுபடியும் 271 பேரை, மன்னிப்பு கொடுத்துவிட்டார்கள் என்று ரிலீஸ் பண்ணினார்கள். அதை வாங்கி, சூப்பிரண்ட்டெண்டெண்ட் கிட்டே இருந்து 10 மணிவரை யிலும் கணக்குப் பார்த்து வெளியே விட்டிருக்கிறார்கள். மன்னிப்புக் கொடுத்ததை மறைக்கணுமே, அதற்கு ஒரு கதை கட்டினார்கள், நான் கேட்டேன். 21-ம் தேதிக்கு அப்புறம் ஒன்றும் இல்லை என்று சொன்னார்கள். அவர்கள் நடந்து கொள்ளுவது யாருக்கும் பொறுமையை இழக்கும் நிலையில்தான் இருக்கும். கண்டபடி திட்டுகிறார்கள். அவதூறு பண்ணுகிறார்கள் என்று உறுதியாகச் சொன்னார்கள். அதை நான் நம்புகிறேன். அங்கே இருக்கிற கான்விக்ட் வார்டரை (convict warder) கண்டபடி பேசியிருக்கிறார்கள். அவர்கள் எவ்வளவு தூரம் பொறுத்திருக்க வேண்டும் என்று நினைத்துப்பாருங்கள். இவர்கள் இழிவான பேச்சு அத்தனையும் பொறுத்துக்கொண்டு இருக்கிறோம் என்று சொல்லுகிறார்கள். இந்த நிலைமையில் இருக்கிறது. கோர்ட் இருக்கிறது. Criminal Law Amendment Act சட்டப்படி குற்றம் செய்தவர்களை சார்ஜ் பண்ணு கிறோம். நிபந்தனை இல்லாமல் ரிலீஸ் பண்ணு என்று கேட்பதற்கு, அவர்களுடைய ஓட்டைப் பெற்று இங்கே வந்த, கனம் அங்கத்தினர் அவர்கள் கேட்க வேண்டியதுதான். அது கூட செய்யாவிட்டால் என்ன இருக்கிறது? எப்படி அரசாங்கம் ரிலீஸ் பண்ணும்? கோர்ட்டு சொல்லட்டும். கோர்ட்டார் குற்றம் இல்லை என்று நினைத்தால், ரிலீஸ் பண்ண உத்தரவு போடட்டும்.

மேலும் மன்றத்தின் காலத்தை எடுத்துக்கொள்ள விரும்பவில்லை. இந்த பட்ஜெட் சட்டசபையில் விவாதிக்கப்பட்டது. இப்பொழுது இங்கேயும் குறிப்பிட்ட சில பிரச்னைகளைப் பற்றிப் பேசப்பட்டது. பேசியவர்களுக்கு எல்லாம் என்னுடைய பாராட்டுதலைத் தெரிவித்துக் கொண்டு இந்த மசோதாவை ஏற்றுக் கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொண்டு என்னுடைய வார்த்தைகளை முடித்துக் கொள்ளுகிறேன்.

MR. CHAIRMAN: The question is—

That the Madras Appropriation Bill, 1962 (L.A. Bill No. 14 of 1962), as passed by the Assembly, be taken into consideration'

30th July 1962] [Mr. Chairman]

The motion was put and carried and the Bill was taken into consideration.

Clause 2 was put and carried.

The Schedule was put and carried.

Clause 1 and the Preamble were put and carried.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Mr. Chairman, Sir, I move—

'That the Madras Appropriation Bill, 1962 (L.A. Bill No. 14 of 1962), as passed by the Assembly, be passed'.

MR. CHAIRMAN : The question is—

'That the Madras Appropriation Bill, 1962 (L.A. Bill No. 14 of 1962), as passed by the Assembly, be passed'.

The motion was put and carried and the Bill was passed.

MR. CHAIRMAN : The House will now adjourn and meet again at 10-30 a.m. tomorrow.

The House then adjourned.

## VI.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

* 166. *Notification issued with G.O. Ms. No. 2211, Industries, Labour and Co-operation (Labour), dated 12th April 1962, regarding amendment to Schedule III to the Workmen's Compensation Act, 1923.*

* 167. *Notification issued with G.O. Ms. No. 2658, Industries, Labour and Co-operation (Labour), dated 13th June 1962, regarding amendment to the Madras Payment of Wages Rules, 1937.*

† 168. *Notification issued with G.O. Ms. No. 2095, Revenue, dated 11th May 1962, directing that the ryotwari settlement of Mahfuskhanpettai, zamin estate in Ponneri taluk of Chingleput district, shall be effected in accordance with the provisions contained in the settlement notification relating to ryotwari settlement of the estates in Tiruvallur and Ponneri taluks of Chingleput district.*

† 169. *Notification issued with G.O. Ms. No. 1190, Local Administration, regarding rules for the co-option as Councillors of persons belonging to Scheduled Castes by the elected members of the Council.*

† 170. *Industrial Development in Madras State—A review for 1961–62.*

† 171. *Notification issued with G.O. Ms. No. 3011, Industries, Labour and Co-operation (Labour), dated 11th June 1962, regarding exemption of every beedi industry in the Tirunelveli district carried on by a woman in her residence from the provisions of sections 3 and 4 of the Madras Beedi Industrial Premises (Regulation of Conditions of Work) Act, 1958.*